

# சைவ வேதாந்த சித்தாந்த ஆராய்ச்சி

மெய்கண்ட நாயனார் சூத்திரங்களையும், திருமுறைகள், சித்தர் நூல்கள், திருமந்திரம், திருக்குறள் தொல்காப்பியம் முதலியநூல்களுடன் 1923ம் ஆடு முதல் சைவ சித்தாந்தத்துடன் ஆராய்ந்து கண்ட தீர்க்கம்.


சி. மு. முத்தையன்

ஆராய்ச்சியாளன்

உறுநாவலை, சித்தன்கேணி



சௌமிய ௵ ஆவணி ௴ சதம் 60

## சைவ வேதாந்த சித்தாந்த ஆராய்ச்சி

### திருவாளர் கி. பரராசசிங்கம் அவர்கள்

இளைப்பாறிய தலைமை ஆசிரியர் வழக்கம்பரை, சுழிபுரம்,

### நல்கிய அணிந்துரை

திருவாளர் சி. மு. முத்தையன் அவர்கள் எழுதிய சைவ வேதாந்த சித்தாந்த ஆராய்ச்சியைப் பார்வையிட்டபொழுது மகிழ்ச்சி அடைந்தேன் அன்னார் எழுதிய ஆங்கில சைவ சித்தாந்தமே முதல் சைவசித்தாந்த நூல் என்று கூறலாம். அவர் அந்த நூலில் சமயத்தையும் விஞ்ஞானத்தையும் அழகாகத் தொடர்புபடுத்திக் கூறியுள்ளார்.

தமிழ்மொழி நாதவிந்துப் பாகுபாட்டில் தொகுக்கப்பட்ட ஒட்டெழுத்து மொழி ஏனைய மொழிகள் யாவும் தனி எழுத்து மொழிகள் எனச் சிறப்பாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. எனவே தமிழ் இலக்கணமும் வேதமொழி இலக்கணங்களும் ஒரேமாதிரி இருக்காது தமிழ் நாதவிந்துப் பாகுபாட்டில் தொகுக்கப்பட்டதால் அவற்றை முத்தமிழ் என சிறப்புடன் அழைக்கப்படும். பக்தி 13 பார்க்க

சித்தியார் முதலாஞ் சூத்திரம் உரை செய்யுள்: ஒருவனோடொருத்தி ஒன்றென்றுரைத்திடு முலகமெல்லாம் வருவதுவந்துநின்று போவதுமாதலாலே தருபவன் ஒருவன் வேண்டும்' என்று இறைவனைப் படர்க்கைப் பொருளாகக் கூறுவதும் சைவ சித்தாந்தக் கருத்தல்ல.

-திருமுறைகள் பார்க்க.

எனவே மெய்கண்டநாயனாரது முதலாஞ்சூத்திரம் அவன் அவள் அது என்று கூறுவதன் கருத்து பதி, பசு, பாசம் என்று இருக்க வேண்டும். பக்தி 21 பார்க்க. தமிழ் மரபுப்படி இறைவனை தன்மை அல்லது முன்னிலையாகக் கூறவேணும் படர்க்கையாகக் கூறக்கூடாது பக்தி 21 பார்க்க. ஆரியச் சமயத்தில் மாயை முதற்பொருளாதலால் சிவனை முதற்பொருளாகக் கூறுது.

வேதங்கள் என்பது அறம் பொருள் இன்பம் வீடு நான்கும் என்பதும் அவைகளைக் கற்கும் கல்வியாகிய எழுத்து, சொல், யாப்பு சந்தம், காலங் கற்பம் என்னும் ஆறங்கமும் அவற்றுள் ஒன்ருகக் கூறுவராம் என்பதுந் தமிழ் மரபு பந்தி 24, 26, 27 முதல் 31 வரை பார்க்க.

எனவே இந்த ஆராய்ச்சிச் சிறப்புடையது இந்த ஆசிரியரது ஆராய்ச்சிச் சிறப்பு இவர் எழுதிவைத்திருக்கும் சைவ சித்தாந்தம் நெறியில் அச்சாகும் வாசித்துக் காண்க. இந்த ஆசிரியரை இறைவன் நெடுநாள் ஆராய்ச்சி செய்து தமிழைச் சிறப்பிக்க அருள் பாலிக்க என்று இறைவனை வேண்டிநிற்கும்.

கி. பரராசசிங்கம்

29-ஆ ஆவணி மீ 1969ம் ஆ.



# சைவ வேதாந்த சித்தாந்த ஆராய்ச்சி.

## பதிப்புரை

துன்பங்களைக் களையவல்லவர் கடவுள். அவர் ஒருவர் தான் ஆன்மாக்களுக்குத் துணையாக உடையவர். அவரது அருளைப் பெற்ருல் துன்பம் ஆன்மாக்களை அணுகாது. துன்பங்கள் அணுகாதிருக்க தினமும் இறைவனை வழிபடுக. இறைவனை வழிபடும்பொழுது பொருள் குறித்து வழிபடக் கூடாது. அவ்விதம் ஒன்றைக் குறித்து வழிபட்டால் குறித்த பொருள் சித்திக்கும் அதனுல் வரும் துன்பத்தையும் பொருள் குறித்து வணங்கியவரே அனுபவிக்கவேண்டி வரும். எனவே பொருள்குறியாத வணக்கமே சாலச் சிறந்தது. துன்பங்களையவும் இன்பம் சிறக்கவும் வழிபாடு செய்மின்.

இறைவன் ஆன்மாக்கள் மாட்டு நித்தமான அன்புடையவர் இமைப்பொழுதும் அவருடைய அருள் எம்மைவிட்டு நீக்குவதில்லை நாம் பிரயத்தனப்பட்டால் இலகுவாக இன்பமடையலாம்-

முந்திய பிறவியில் நாம் செய்ததை இந்தப் பிறவியில் அனுபவிக்கின்ருேம். இந்தத் தத்துவத்தை மாணவர்கள் மனத்தில் ஆசிரியர்கள் புகுத்திவிட்டால் அவர் மாணவர்களுக்குச் சீரான வாழ்க்கையை சிருட்டித்தவராவர்.

இந்நூலை அச்சிட்டுத்தந்த சங்கானை ராஜா அச்சகத்தினருக்கு எமது நன்றி உரித்தாகுக.

பொ. மகாதேவன்

திருச்சிற்றம்பலம்

# சைவ வேதாந்த சித்தாந்த ஆராச்சி

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினர் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

குனித்த புருவமுங் கொவ்வை செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போன் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய வெடுத்த பொற்பாதமுங் காணப்பெற்றால்
மனிதப்பிறவியும் வேண்டுவதேயித்த மாநிலத்தே.

திருநாவுக்கரசு சுவாமிகள்

கல்வி

## முன்னுரை

ஆன்மாக்கள் அடையவேண்டிய நுண்ணிய சிறப்புடைய பொருள் கல்வி. கல்வியினாற் பெறும் அறிவையே ஞானம் என்று கூறலாம்.

''கேடில் விழுச் செல்வங் கல்வி, ஒருவர்க்கு
மாடல்ல மற்ற அவை''

என்னும் திருக்குறள் காண்க.

ஞானம் அபரஞானம் பரஞானம் என்று இரண்டு வகைப்படும் அபரஞானங் கல்வியினாற் பெறுவது பரஞானம். கற்ற கல்வியை சாதனை செய்து பெறுவது சாதனையில்லாத கல்வியினாலும் கல்வியில்லாத சாதனையாலும் பயனடைய முடியாது.

''ஒருமைக் கண்தான் கற்ற கல்வி ஒருவர்க்கு
எழுமையும் ஏமாப்புடைத்து''

என்னும் திருக்குறளுங் காண்க.



## சைவ சித்தாந்தம் ஏன் கூறப்பட்டது

சைவசித்தாந்தம் ஏன் கூறப்பட்டதெனின் சித்தாந்தக் கருத்தும் வேதாந்தக் கருத்தும் ஒரே தன்மையாக இருக்கவேணும் என்பதற்காகவேயாம்.

உதாரணம்

காட்டில் வேடனாகியுங் கடலில் வலைஞனாகியும் நாட்டில் குதிரைப்பாகனாகவும் தோன்றி உயிர்களாகிய எமது வினையைத் தொலைத்து அருள்புரியும் திருப்பெருந்துறைப் பெருமானது திருவடிக்கமலங்களை நெஞ்சமே மயக்கம் தீரும்படி துதிப்பாயாக என்பது சித்தாந்தக் கருத்து.

''காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்
நாட்டிற் பரிபாகன் நம்வினையை வீட்டி
அருளும் பெருந்துறையான் அங்கமலப்பாதம்
மருளுங்கெட நெஞ்சே வாழ்த்து.

என்பது வேதாந்தக் கருத்து
மாணிக்கவாசகசுவாமிகள் பண்டாய நான்மறை

## சைவ சித்தாந்தம் விஞ்ஞானம் மிகுந்தது

இந்த ஆராச்சிமூலங் கண்ட உண்மை சைவ சித்தாந்தம் விஞ்ஞானம் மிகுந்தது என்பதேயாம் தமிழ்மொழி மிகப்பழமையது கடவுளராற் தொகுத்துக் கொடுக்கப்பட்டது என்று தாயுமான சுவாமிகள் கூறுவது முற்றும் உண்மை.

உதாரணமாக தற்கால விஞ்ஞானத்தின்படி தனித்த ஒரு பொருளிலிருந்து இன்னொரு பொருள் தோன்ற முடியாது என்பது பொதுவிதி. இரண்டு பொருள் சேர்ந்தால் மூன்றாவது பொருள் தோன்றும் என்பதும் பொதுவிதி. பொருள்களின் தோற்றத்திற்குரிய சிவபெருமானை விஞ்ஞானத்தின் பொருட்டு எதிர்மறைக்கூறு (Negative) என்று கூறலாம். பொருள்களை இயக்கச்செய்து ஊக்குவிக்கும் சக்தியை (Positive) இடக்கூறு என்றுங் கூறலாம். ருபம் விரூபம் என்னும் யாகுபாடே நாதவிந்துப் பாகுபாடு. வானத்திலிருக்கும் இரண்டு பொருட்களில் சிவபெருமான் தத்துவ அதீதர் ஒருவராலும் காணமுடியாதவர் அவர் தாமாக ஒன்றும் செய்வதில்லை சக்திபொருளை ஆக்குபவள் மாயைவிந்து என்றும் கூறப்

படும் விந்தில்லாவிட்டால் நாதந்தோன்றாது நாதமில்லாவிட்டால் விந்துந்தோன்றாது இதுபோல் எதிர்மறைக்கூறு இல்லாவிட்டால் இடக்கூறும், இடக்கூறில்லாவிட்டால் எதிர்மறைக்கூறுந் தோன்றாது இந்தத் தத்துவத்தை தமிழ்மொழியில் காணலாம்.

உதாரணமாக அகரத்தைப் பகுத்தால் அது அ+கரம் எனப் பகுக்கப்படும் அவற்றை உச்சரிக்கும்பொழுது "அஅ" என்று உச்சரிக்கப்படும் "அ" என்பது அகரத்தின்விந்து கரம் என்பது அகரத்தின் நாதம் இரண்டும் ஒட்டியே "அஅ" என்று உச்சரிக்கப்படும் கரம் எல்லா எழுத்தையும் செவணியிருக்கும்

உதாரணம் "கஅ" "காவன்று" என்று வரும் அந்தக் கருத்தையும் பொருளையுமறிந்த பனம்பாரனார் தொல்காப்பியப்பாயிரத்தில்

"மயங்காமரபின் எழுத்து முறைகாட்டி" என்றார்.

தமிழில் எழுத்துத்தான் பிரதானம். சிலர் இவற்றை நன்னூல் சூத்திரம் 73 பிரகாரம் விளக்குவர் அது பொருந்தாது, இது எழுத்தின் தொகுப்பு முறையைக் கருதும் மயக்கமாவது தற்காலக் கல்வியின் "அஅ" ஆவன்று என்பதை "அ" "ஆ" என மாத்திரை மயங்க உச்சரிப்பது குறிக்கும், தமிழை ஆரிய மொழிபோல உச்சரித்தால் மந்திரசக்தி குன்றும், தமிழ் எந்தமொழியின் சொல்லையும் இலக்கணவிதியாக திசைச்சொல் என்றுகூறி ஏற்றுக்கொள்ளும் ந.னூ. 272 சூத்திரம் பார்க்க, ஆரிய எழுத்துக்களில் நாதவிந்துப் பாகுபாடு கிடையாது மந்திரசக்தியும் குறைந்தது தமிழ் இயல். இசை, நாடகம், என மூன்று பகுதிகளாக கடவுளரால் தொகுத்துக் கொடுக்கப்பட்டதாக தாயுமான சுவாமிகள் கூறுகின்றார். "கன்னல் அமுதென" வரும் தாயுமான சுவாமிபாடலில் காண்க இக் கருத்தை அப்பர் சுவாமிகளும் பல இடத்தில் வலியுறுத்துகின்றார்.

### இயற்றமிழ்

இயற்றமிழ் சாதாரணமாகப் பேசப்படும் மொழி, இந்தத் தமிழ் சாதாரணமாக எல்லாருக்கும் கற்பிக்கப்படுகின்ற மொழி.

### இசைத்தமிழ்

இது தானம் மேளம் ஒத்து குழல் யாழ் பண் முதலியனவற்றையும் பண்ணிற்குப் பாடப்பட்டனவையும் குறிக்கும் இந்தத்தமிழ் யாவற்கும் கற்பிக்கப்படுவதில்லை.



### நாடகத்தமிழ்

நாடு - அகம் என்பதுபோலக் கருத்துக்கொள்க நாடுதல் தேடுதல் அகம் - அகப்பொருளை இந்தத் தமிழும் யாவற்கும் கற்பிக்கப்படுவதில்லை.

இக்காலத்தில் பொதுவாக இயற்றமிழையே கல்வி நிலையங்களில் கற்பிக்கின்றார்கள் இயல், இசை, நடகம், மூன்றுங்கற்றால் தான் தமிழ் கற்றதற்கு ஒப்பாகும்.

## இலக்கியம்

இலக்கு + இயம் இலக்கு = சுட்டுப்பொருள்

இயம் எழுத்தாலும் சொல்லாலும் யாப்பாலும் பொருளாலும் இன்பம் பயப்பது இயற்றமிழ் இலக்கியமாகாது இசைத் தமிழாலும் நாடகத்தமிழாலும் ஆக்கப்பட்டதே இலக்கியமெனப்படும் வேறுமொழிகளில் இயல்மொழியோ இலக்கியமெனப்படும் சிலர் நாடகத்தமிழை கூத்துத்தமிழ் என்றுங் கூறுவர் கூத்துத்தமிழ் என்று ஒருதமிழ் கிடையாது கூத்து புறப்பொருளில் உள்ளது அகமேயன்றி புறம் தோன்றினாலும் அதுவும் அகத்துள் மயங்கி அகமாகும் அகமில்லாது புறம் தோன்றாது விரிவு சைவசித்தாந்தம் பார்க்க தமிழ் அளியாது இருப்பதற்குக் காரணம் அதன் இலக்கியமரபேயாம் பண்டைய மரபிற்கு கல்வி நிலையங்கள் திருத்தப்படாவிட்டால் கல்வி சீரடையாது கல்வி மந்திரிமார் தகுந்த நடவடிக்கை எடுத்து கல்வியைத் திருத்தவேணும் திருமுறைகளிலும் சித்தர் நூல்களிலும் ஆரிய எழுத்து காணப்படவில்லை ஆரியமொழியை கடவுள் கொடுத்தார் என்றும் கூறப்படவுமில்லை,

பண்டைக் காலத்தில் பலவகைப்பட்ட சமையங்கள் இருந்ததாகத் தெரிகின்றது அந்தந்தச் சமயத்தவர்க்கெல்லாம் அவரவர் கடவுள்போல் சிவபெருமானே காட்சியளித்து முத்திப்பேறு கொடுப்பார் என்பது சைவ சித்தாந்தக் கருத்து, சைவர்களும் அதே கருத்துடையவர்கள் மறு சமயங்களைக் கண்டனஞ் செய்வதில்லை,

மழை ஒருவரைத் தவிர்த்துப் பொழியாது வெய்யில் ஒருவரைத் தவிர்த்துக் காயாது அதுபோல இறைவனால் கூறப்பட்ட சித்தாந்தமும் ஒருவரைத் தவிர்த்துக் கூறப்படாது எனவே சைவ சித்தாந்தத்தை ஒருகாலத்தில் இறைவனே கூறினார் அது தனித்தொரு பகுதியினர்க்குரியதாக இருக்காது.

''அறுவகைச் சமயத் தறுவகையோர்க்கும்
வீடுபேருய் நின்ற விண்ணேர் பகுதியும்
கிரீடம்புனேயும் கிழவோன்''

திருவண்டப் பகுதி வரி 17-19
மாணிக்கவாசக சுவாமிகள் கூறுவது காண்க

''அறிவிருல் மிக்க அறுவகைச் சமயமவ்வவர் க்காங்கே யாரருள் புரிந்து'' என்றவகுஞ் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரமுங் காண்க.

இதன் கருத்தறிய சைவ சித்தாந்தம் அண்டகுண்டலி என்ற பந்தி 34/35 பார்க்க எந்தச் சமயத்தவராயினும் யார்யார் தாம் வணங்கும் கடவுளோடு சைதன்னிய மடைவார்களோ அவர்கள் யாவரும் அண்டகுண்டலியில் சுத்தமாயாபுவனவாழ்க்கையில் அசுத்மாயாபுவனமழியும் வரை இறைவழிபாட்டில் ஈடுபட்டிருப்பர். அவர்கட்கெல்லாம் எந்தெந்தச் சமயத்தவராயினும் அத்தந்தச் சமயத்தில் கடவுளர்போல மாதொருபாகர் தாமே காட்சியளித்து அண்டம் மளியுங் காலம் பரமுத்தி கொடுப்பார் என்பது சைவ சித்தாந்தக் கருத்து. உலகங்களின் யாவையும் படைத்து ஆன்மாக்களுக்குத் தேவையான முதற்கரு உரிப்பொருள்களையும் இறைவனே படைப்பர் என்ப. உலகப் பொருள்களில் முதற்கருஉரி மிகச் சிறப்புடையது. முதற்கருஉரிப்பொருள் என்ற மூன்றே நுவலுங் காலை முறை சிறந்தனவே. பாடலுட் பயின்றவை நாமுங்காலே,

தொல் அகம் 3 காண்க

பூவுலகத்தில் அறங்குன்றி மறம் தலையெடுக்குங் காலம் சுத்த மாயா புவன வாசிகளிற் சிலர் இந்தப் பூமியில் பிறந்து அறத்தை நிலைநாட்டி பரமுத்தியெய்துவர் என்பது சைவ சித்தாந்தக் கருத்து இந்த வகையில் பிறந்தவர்களில் யேசுக்கிறிஸ்து, மோசேஸ் புத்தர், காந்தியடிகள், முகமதுநபி முதலியோராவர்.

அப்பர் சுவாமிகள் மாணிக்கவாசக சுவாமிகள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் சம்பந்தமூர்த்தி சுவாமிகள் நால்வரும் இந்தப் பூமியில் வந்து பிறந்து இருந்து மறைந்துபோன அறம், பொருள், இன்பம் வீடு ஆகிய வேதப்பொருள் நான்கையும் முறையே அந்தந்த நிலையில் நின்று வாழ்ந்து காட்டி உலகத்திற்குக் கொடுத்து அவர்களும் பரமுத்தி எய்தினர்.

அந்த நான்கு வேதங்களையும் பிறவற்றையும் நம்பியாண்டார் நம்பி யாவும் முறையிடு போன்று தோன்றியமையால் திரு என்னும் அடை கொடுத்து திருமுறை என வகுத்தார். முதலில் நம்பியாண்டார்நம்பியால் ஏழாகவே வகுக்கப்பட்டது. அவை



ஏழில் அடங்காத காரணத்திஞல் பின்னர் பன்னிரண்டாக்கப்பட்டன. வேதம் நான்குதான் உள்ளன. அவைகளைப் பல சமயாச்சாரியர் பிற்காலத்திற் தோன்றிப் பாடினரென்க.

வேதப்பொருள்களை இறைவன் கொடுத்தார் என்ருல் அது எந்தச் சமயத்தவர்க்கும் ஏற்கக் கூடியதொன்ருக இருத்தல் வேண்டும். அறம் பொருள் இன்பம் வீடு நான்கும் யாவராலும் ஏற்றுக்கொள்ளக்கூடியது. எனவே அவற்றை புருசார்த்தம் என்பர்.

புருசார்த்தம் என்பது ஆன்மா அடையவேண்டிய கருத்து அவற்றையே சைதன்னியம் எனப்படும் ஆன்மா ஓர் எல்லையில் இறைவஞேடு சைதன்னியமடையும் என்பது கருத்து. புருசார்த்தங்களைக் கூறுவதே வேதம் எனப்படும். புருசார்த்தம் இல்லாதது வேதமாக மாட்டாது.

முதற்கருஉரிப் பொருள் மூன்றும் கடவுளாற் கொடுக்கப்பட்டதானதால் அதுவும் யாவற்றிற்கும் பொதுவானது. முதற்பொருளில் முல்லையென்று கூறும் காடும் காடுசார்ந்த ஊரும் இல்லாத நிலம் கிடையாது. குறிஞ்சி யென்னும் மலையும் மலைசார்ந்த நிலமும் இல்லாத தேசம் கிடையாது. மருதம் என்று கூறும் வயலும் வயல் சார்ந்த நிலமும் இல்லாத தேசம் கிடையாது. நெய்தல் என்னும் கடலும் கடல் சார்ந்த நிலமும் இல்லாத தேசம் கிடையாது. பாலை என்னும் சுரமும் சுரஞ்சார்ந்த நிலமும் இல்லாத தேசம் கிடையாது இங்கு மரம் சிறந்து நின்ற பூமியை மரத்தின் பெயரால் கூறினும் சிலர் நிலத்தை திணை என்பாரும் ஒழுக்கத்தைத் திணை என்பாரும் என இரண்டு பகுதியுண்டு. வெறு நிலத்திற்கு ஒழுக்கம் கூற முடியாததால் திணை என்ற கருத்து ஒழுக்கத்தையே குறிக்கும். இறையனூர் அகப்பொருள் பார்க்க அறம் பொருள் இன்பம் வீடு நான்குமே சைவ வேதமாதலால் மேற் கூறியவற்ருல் இன்னும் பல உதாரணங்கள் எடுத்துக்கூறத் தேவைப்படவில்லை என்பதஞல் இத்துடன் முடித்துக்கொள்ளப்படுகின்றது. குருமார் எனத் தோன்றுபவர்கள் யாவரும் வீட்டு நெறியில் உள்ளவர் என்பதும் வீடு என்பது மோட்சம் அல்ல அறம் பொருள் இன்பத்தை விடுதல் என்பது கருத்து.

**காரணம்**

எமது ஆராட்சியை அனேகர் வெளியிடும்படி கேட்டும் அவற்றை ஒரு குருவருள் இல்லாது வெளியிட அடியேன் விரும்பவில்லை எமது ஆராட்சியின் பயஞக வெளியிட்ட அன்பு மலருக்கு முகவுரை வேண்டிப் போனவிடத்தில் எமது குருவைச் சந்தித்தேம். எமது திராவிட சித்தாந்தம் என்னும் நூலைப் பார்வையிட்டதும் அவர் விசனக்குறி காண்பித்தார். அவற்றை அடியேன் தப்பிதமாக விளங்கி

ஆங்கில லெக்சிக் (Logic) படித்த தங்களுக்கு எமது சித்தாந்தம் அசண்டையாகக் காட்சியளிக்கும் என்று அறியாது கேட்டுவிட்டேம் அப்பொழுது அவர் சொன்னார் இத்திராவிட சித்தாந்தம் மாதிரியான ஆராட்சிக்குத் தகுந்த நூல் சைவ சித்தாந்தம் அவற்றைக்கூறு என்றார். அடியேனுக்குச் சைவ சித்தாந்தம் நல்லாக விளங்காது என்றேம். எழுதத் தொடங்க எல்லாம் நீ அறியவரும் எழுது என்றார். சைவ சித்தாந்தத்தில் ஈடுபாடு இல்லையே என்று திரும்பவும் கூற சிவஞானபோதத்தை சிவஞான முனிவரும் சிவஞானசித்தியாரை அருணந்திசிவாச்சாரியாரும் கூறியிருக்கின்றனர். நீ சைவ சித்தாந்தத்தைக்கூறு என்றார். ஸ்ரீலஸ்ரீ சுவாமி வேதாசலமும் திருவாளர் பொன்னம்பலம்பிள்ளையும் ஆராய்ந்து காணமுடியாததை சிற்றறிவுடைய அடியேன் எவ்விதம் ஆராய்ந்து காணமுடியும் என்றேம்,

பெரியோர் மனத்திலும் தபோதினர் மனத்திலும் இறைவன் குடிகொண்டிருப்பசர் அவர்களுக்கு யாவும் சமமாகத் தோன்றும் அன்னோரை எவ்விதம் ஆராட்சியில் ஈடுபடுத்தலாம் அப்படிச் செய்வது அவர்களை கீழ்ப்படிக்குத் தள்ளிவிடுவதற்கொக்கும்.

இந்தப் பணியைச் செய்யத்தக்கவன் நீ, எனவே நீ செய்து முடி என்று பணித்தார்.

எழுதத் தொடங்க நீ யாவும் அறியவரும் என்ற வாக்கே நாம் இந்த ஆராட்சியை செய்ய உதவியது என்று கூறலாம்.

எமது குருவும் ஆராட்சியில் கண்ட சிலவற்றை அறிந்திருந்தாரோ என்பது ஐயப்பாடு. எமது குருவின் கருத்துப்படி அருணந்தி சிவாச்சாரியாரும் சிவஞான முனிவரும் தம் கருத்திலும் தமது சித்தாந்தத்திலும் கருத்துடையவராக இருந்தாரேயன்றி எமது சமயத்தை கெடுக்கவில்லை. சித்தாந்தத்தின் கருத்து யாது என விளங்கவில்லை என்று எமது குருநாதர் கூறியதால் அவற்றைப் பிரத்தியோகமாக ஆராய்ந்தேம். சைவ சித்தாந்தம் அத்தியாயம் 2 பந்தியைப் பார்க்க.

அருணந்தி சிவாச்சாரியாரும் சிவஞான முனிவரும் உண்மையில் மெய்கண்ட நாயனார் இரௌவக ஆகமச் சூத்திரங்களை கற்றுக் கூறினார் என்று நினைத்த ஆரிய இலக்கண விதிகளைத் தழுவி உரைகூறியிருக்கின்றனர். அது தமிழ் மரபறிந்தவருக்கும் தற்கால விஞ்ஞானத்திற்கும் மாறாகத் தோன்றுகின்றது. அடியேனுக்கு ஆரிய இலக்கண விதியும் அவர்கள் சித்தாந்தமும் தெரியாததாலினால் அதிகம் கூற விரும்பவில்லை.



தமிழ்மக்கள் புகழை விரும்பினாரேயன்றி செயலைக் கவனிக்கவில்லை சைவத்தைத் திருத்த பல சைவ நிலையங்கள் இருந்தும் சைவ சித்தாந்தமும் சைவ வேதாந்தமும் ஏன் ஒரேமாதிரி இருக்கவில்லை என்பதை நினைக்கவும் இல்லை செய்யவும் இல்லை இது காறதை மயிர்புடுங்கி கடவுளைக் கும்பிட்டான் கதையாக முடிந்தது சைவ பீடங்கள் எத்தனையோ ஈழத்திலும் தாய்நாட்டிலும் இருக்கின்றன எத்தனையோ கல்விமான்கள் இருக்கின்றனர் இவர்கள் இருந்துமா சைவமுந் தமிழுங் குன்றவேணும் என்பது கேள்வி இதற்குக் காரணம் இவர்களதுபுகழ் விருப்பமேயாம் என்பது காட்டுகின்றது.

குருசொன்ன வாக்கே அடியேன் சைவ சித்தாந்தத்தையும் வேதாந்தத்தையும் அறியவந்தது.

வேதாந்தம் காலங்களின் காரணம் மூன்றையும் கொடுத்து பாடுவதற்குரியதொன்றி சாதாரண பாமரனிற்கு உணர்த்திக் கூறக்கூடிய நூலல்ல எனவே அடியேன் கூறிய சைவவேதாந்தம் என்ற நூலை மக்கள் அறிவதற்காக அச்சிட்டு சிறிது காலம் வெளியிட்டு பின்னர் நிறுத்தவேணும் என்ற எண்ணம் பூர்த்தியாகாததினால் அந்நூல் வெளியீட்டை நிறுத்திவிட்டேம் அவற்றைத் திருவருள் விரும்பவில்லை போலும் பதினுக்கும் சைவசித்தாந்தம் சத்தப்பிரபஞ்சப்பார்வையும் நாம்பெற்ற செல்வம் இந்த வையகம் பெற்று உய்யக்கூடியதாக இந்த நூலையும் ஆராட்சிகளையும் குருசமர்ப்பணமாக்கி எமது குருவின் படத்தையும் இங்கு தருகின்றேம்.



**சு. சிவபாதசுந்தரம் B. A.**
இளைப்பாறிய அதிபர் விக்டோறியாக் கல்லூரி சுழிபுரம்

ஆராட்சிகள் நடாத்துவதற்கு பணம் முக்கியமான தேவையில் ஒன்றாகும் அவற்றை கைமாறு கருதாது தந்துதவிய வள்ளல் மு. நச்சேத்திர மவர்கள் செய்த உதவியை சைவ உலகம் மறவாதிருக்கவும் அன்னார் நெடுங்காலம் வாழ்ந்து இதுபோன்ற சைவத் தொண்டுகளை செய்யவும் சைவத்தின் பெயராலும் எமது சொந்தக் சோதாவிலும் இறைவன் அன்னார் நெடுங்காலம் வாழ அருள் புரிவாராக என வேண்டுதல்செய்து அவரது படத்தையும் இங்குதருகின்றேம்.



நகரிசெம்பிளான் தேசிய சபை மாசி அங்கத்தவரும் அகில மலாயா இலங்கையர் சங்கத்தின் தலைவரும் நெகரிசெம்பிளான் இலங்கையர் சங்கத்தின் தலைவரும் நட்சேத்திரம் ரியாலிற் றீசின் உருமையாளரும் தோட்டமுதலாளியுமான நகரிசெம்பிளான் பிரதம மந்திரியின் செயலாளருமாகி இளைப்பாறிய மு. நச்சேத்திரம் No: 2 யாலான் அத்தாஃப் சிறம்பான் மலேசியா.

# சைவ வேதாந்த சித்தாந்த ஆராய்ச்சி

## 1. பண்டைய வரலாறு

பண்டைக் காலத்தில் சைவ சித்தாந்தமும், சைவ வேதாந்தமும் இருந்ததாகத் திருமுறைகளும் சித்தர் நூல்களுங் கூறுகின்றன.

*மன்னு மாமலை மகேந்திர மதனிற்*
*சொன்ன ஆகமந் தோற்றுவித் தருளியும்.*

கீ. தி. அக : வரி 9 - 10

ஓர் காலத்தில் சிவபெருமான் உமையம்மையாருக்குக் கூறிய பதி, பசு, பாச இலட்சணத்தை இறைவன் சுத்த வித்தையில் மகேந்திர கிரியில் எழுந்தருளி ஏடு ரூபமாகத் தோற்றுவித்துக் கொடுத்தார் என்று கூறப்படுகின்றது.

ஆகமம் ஏடு ரூபமாக இருந்ததாகவும், அவற்றை மீனவனாகத் தோன்றி இறைவனே மீட்டுக் கொடுத்தார்.

*கேவேடராகிக் கெளிறது படுத்து*
*மாவேடாகிய ஆகமம் வாங்கியும்*

கீ. தி; அ : வரி 17 - 18

என்றும் மாணிக்கவாசக சுவாமிகளே கூறுகின்றார். கீர்த்தித் திருவகலில்;

*மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து*
*உற்ற ஐமுகங்களாற் பணித்தருளியும்*

கீ. தி; அ : வரி 19-20

ஆகம ஏட்டை மீட்டுக் கொடுத்த பின்னர் மற்றும் வேதப் பொருள்களை மகேந்திரத்தின் கண் இருந்து ஐந்து முகம் போன்ற ஐந்து உறுப்புக்களாக கூறி அருளினர் என்றுங் கூறப்படுகின்றது.

மகேந்திரத்தின் கண் இருந்து என்பது ஈண்டும் சுத்த வித்தையில் எழுந்தருளினர் என்பது கருத்து. "ஆயிரம் முகந்தான் அகன்றதாயினும்" என்பதற்குப் பொருள் உரைக்கும் பொழுது ஆயிரம் உறுப்புக்கள் என்று பொருள் கூறுவது போல ஐம் முகம் என்பது ஐந்து உறுப்பு என்பது கருத்தாதல் காண்க.

மனிதனுக்குத் தன் ஆன்மாவையே தெரியாது. கடவுளுக்கு ஐந்து முகம் என்பது அனுமானமேயாம், ஆறுமுகமும், யானைமுகமும் அனுமான முகங்களேயாம்.

## 2. திருவருளின் மகிமை

இறைவன் ஆன்மாக்கள்மாட்டு நித்தமான அன்புடையவர். அந்த அன்பின் பயன்தான் எங்களுடைய வாழ்க்கை. நன்மை செய்தால் நன்மையும், தீமை செய்தால் தீமையும், தந்து எம்மை தன்னுணர்வு பெறச் செய்யும் தன்மையே நாமனுபவிக்கும் தீமைகள். அவற்றைச் செய்யாது இருந்தால் பாவம் எம்மைப் பற்றாது. "பற்றாதவரைப் பற்றா பாவமே" என்று நாயன்மாரும் சொல்லிவைத்தனர்.

## 3. ஆராய்ச்சிக்குக் காரணம்

இந்த ஆராய்ச்சிக்குக் காரணம் யாதெனில், 1925ம் ஆண்டு குரோதன ஆண்டு ஐப்பசித்திங்கள், தென் இந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, மெய்கண்ட சாத்திரம் பதினான்கிற்கும், முகவுரை எழுதிய சென்னை நியாய கலாசாலைப் பேராசிரியர் திருவாளர் கா. சுப்பிரமணியபிள்ளை எம். ஏ. எம் எல் அட்வகேட் அவர்கள் மேற்படி நூல் முகவுரை பக்கம் 45ல் சிவஞானபோதம் முதனூலுடையதா என்ற கேள்வியுடன் சில குறிப்புகளுங் கூறியிருக்கார்.

பெரியபுராணம் உபோற்காதத்திலும் வேதங்களில்வகுத்த வேள்வி முதலியன அநித்தியமான காமியங்களைப் பயப்பன என்று ஸ்ரீ ஆறுமுகநாவலபெருமானுங் கூறியிருக்கார். சிலர் ஆரிய மொழியை வலது நேத்திரங்களாகவும் தமிழ் மொழியை இடது நேத்திரங்களாகவும் கடவுள் கொடுத்தார் என்றுங் கூறினர். சிலர் நான்கு வேதங்களையும் பிரமன் கொடுத்தான் என்றுங் கூறினர்.

1923வது வருடம் கழக வெளியீடு செந்தமிழ் செல்வியில் சிலம்பு ஒன்று பரல் ஒன்றில், மேற்படி திருவாளர் கா. சுப்பிரமணியபிள்ளை எம். ஏ. எம். எல். அட்வகேற் நியாயகலாசாலைப் பேராசிரியர் சென்னை '*திருநான்மறை விளக்கம்*' என்று ஒரு கட்டுரை தொடர்ச்சியாக எழுதி வந்தார் அதுவும் இந்த ஆராய்ச்சிக்குக் காரணமாக இருந்தது. திருமுறைகளுக்கும் மெய்கண்ட சூத்திர உரை போன்று காணப்பட்ட போலி நூல்களுக்கும் ஒரு தொடர்புங் காணப்படவில்லை. மெய்கண்டசாத்திரமென்று உரைகள் அசப்பிய



மாகக் கூறியிருந்தது காணப்பட்டது. பிரம்மா, விட்டுணு, உருத்திரன் இவர்கள் யார்? என்ற ஆராய்ச்சியும் அறிய வேண்டியதாக இருந்தது.

மாணிக்கவாசகசுவாமிகள் கூறிய திருப்பொற் சுண்ணப் பாட்டின் வேதமும் வேள்வியும் என்ற பதங்களுக்கு உரை அசப்பியமாகக் காணப்பட்டது. இங்கு கூறப்பட்ட வேதம் பிரம்மனால் கொடுக்கப்பட்டதாக இருந்தால் இந்த வேதங்களுக்கு முதல்வன் யார் என்பது சரியாகக் காணப்படவில்லை 'சிந்தியுங் கௌரியும் பார்பதியுங் கங்கையும் வந்து கவரி கொள்மின் என்றால் பிரமனுக்கா சிவனுக்கா இவர்கள் கவரி கொளவது என்பது விளக்கவில்லை.

செபதப அனுட்டானங்களில் கூறப்படும் சிவன் பார்பதி விக்கினேசுரர் முருகவேள் இவைகளின் பெயர்கள் போலி மெய்கண்ட நூலில் கூறப்படாது இருந்தன இவைபோல் பல மாறுபாடுகளைக் கண்டு இவைகளை நாமே ஆராய்ந்து காணவேனும் என்ற காரணத்தினால் இந்த ஆராய்ச்சியில் 1923வது வருடம் தொடக்கம் ஈடுபட்டேன்.

1923வது ஆண்டு தொடக்கம் சித்தர் நூல்களும் திருமுறைகளும் ஆராயப்பட்டன எந்த ஒரு பாடலிலும் திருமுறைகளிலும், சித்தர் நூல்களிலும், இறைவன் ஆரிய மொழியைக் கொடுத்தார் என்று கூறப்படவில்லை பதிலுக்கு தமிழ் மொழியைக் கொடுத்தார் என்று கூறப்பட்டிருப்பது காணப்பட்டது.

எனவே தமிழ்மொழி கடவுளாற் கொடுக்கப்பட்ட மொழி யென்பது திண்ணம் சிலர் எல்லா மொழியினுங் கடவுள் கண்டு என்று கூறுவர் இன்ன மொழி கடவுளாற் கொடுக்கப்பட்டதென்பதையறியாது, அசப்பியமாகப் பதில் கூறுவர்

## 4. தொல்காப்பிய ஆராய்ச்சி

இலக்கண நூல்களில் மிகப் பழமை வாய்ந்தது தொல்காப்பியம். இரண்டாம் சங்ககாலந் தொட்டு தொல்காப்பியம் தமிழ் ஆராயப் பாவிக்கப்பட்டு வந்ததாக நக்கீரதேவர் இறையனார் அகப்பொருளில் கூறுகின்றார். மாணிக்கவாசக சுவாமிகள் தொல்காப்பிய இலக்கணத்தை, தமது திருவாசகத்திலும், திருக்கோவையாரிலும் சிறப்பாகக் காட்டியிருக்கின்றார்.

திருமுறைகளில் பல பாடல்கள் ஊடல் முந்தியாகக் காணப்படு கின்றன. தொல்காப்பியம் 79வது சூத்திரத்தின்பிரகாரம் வேதப்பகுதிக்கும் தொல்காப்பிய இலக்கணம் பொருந்து கின்றது. திருவாசகத்தில் காணக்கூடியதாக இருக்கின்றது. உரிப்பொருள் ஐந்தும் திருவாசகத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

சைவத் திருமுறைக்கும் தற்காலங் காணப்படும் சைவ சித்தாந்தம் என்று கூறும் நூலிற்குந் தொடர்பு காணப்பட வில்லை. மாறுபாடாகவே காணப்படுகின்றது. திருமுறைகள் சைவர்களின் வேத நூல்கள். அவைகளையும் நம்பியாண்டார் நம்பி வேதங்கள் என்று கூறுவதற்கு காரணங்கள் உண்டு.

ஒன்று அருள் கொண்டு சொல்லப்படுவனவெலாம் வேதம் எனப்படும். தர்க்க நூல்களுக்கு முடிபானது வேத நூல், வேத நூல்களுக்கு மிஞ்சி தர்க்கம் செய்யக்கூடாது என்பது பொது விதி. யாவும் முறையிடு போன்று தோன்றுவதனுல் திரு என்னும் அடை கொடுத்து திருமுறையென்று கூறியிருக்கலாம்.

## 5. பதி ஆராய்ச்சி:

பதி எல்லாப் பொருளிலும் பதிந்திருப்பவர் என்பது கருத்து. சிலர் கடவுள் இல்லையென்று கூறுவர் அது தர்க்க ரீதியாக கடவுள் இருக்கின்றார் என்பதுகாட்டுகின்றது. இல்லாத பொருளுக்கு இன்மை உணர்வு தோன்றாது. குடம் இல்லை யென்றால் குடம் என்றபொருள் இருந்தது என உணர்வே குடம் இல்லையென்பதற்குக் காரணமாவதுபோல அனுமான உணர்வு தோன்றும்.

## 6. சிவன் தென் நாட்டவர் கடவுள்;

சிவன் எல்லாப் பொருளினும் சிவனியிருப்பவர் என்பது கருத்து.

*தென்னாடுடைய சிவனே போற்றி*
*எந்நாட்டவர்க்கு மிறைவா போற்றி.*

மாணிக்கவாசகசுவாமிகள் போ. தி. அ. வரி; 164 - 16[illegible]

சிவன் எந்த நாட்டவருக்கும் எந்தச் சமயத்தவருக்கும் ஈசன் என்ற கொள்கையால் சைவர்கள் சர்திப் பாகுபாடு



மதகண்டனமும் இல்லாதவர் என்பது கருத்து.

## 7. சிவன் தத்துவ அதீதர்

சிவன் தத்துவ அதீதர் அவரை ஒருவருங் காணமுடியாது. "அங்கிங்கெனுதபடி" என்னும் தாயுமானவ சுவாமி பாடல் காண்க. அவரது காட்சிகள் யாவும் சத்தவித்தையிலுள்ளது.

## 8. தீமை செய்யாதிருக்க வழி

பல மேல்நாட்டு மேதாவிகள் மனிதன் தீமை செய்யா திருக்க என்ன வழி என ஆராய்ந்து கண்டுபிடிக்கவில்லை இதற்கு ஒரு வழிதான் உண்டு என்பதை சைவ சித்தாந்தம் கூறுகின்றது.

அது பின்வருமாறு:

ஒவ்வொரு மனிதனும் இந்தப் புமியின் குடியுரிமையோடு (Democrocey) வாழ விடப்பட்டிருக்கின்றான். எந்த ஒரு செய் கையை அவன் செய்கின்றானே அதன் பலனை அவனே அனுபவிப்பான் அவற்றையே கன்மம் என்றுங் கூறப்படும் அவை மூன்று பகுதியாக உடையன (1) சஞ்சிதவினை, (2) பிராரத்துவவினை, (3) ஆகாமியவினை, என்பன

9 சஞ்சிதவினை: வினைகள் யாவும் பழையனவும் புதியனவும் ஒன்றாகத் திரண்டிருப்பது.

10 பிராரத்துவவினை: சஞ்சிதவினையிலிருந்து அனுபவிக்கக் கொடுக்கப்படுவது. அவை தனு, கரண, புவன போகங்கள். இவைகளின் விரிவு சைவ சித்தாந்தம் படித்து அறிக.

11. ஆகாமிய வினை: ஆகாமியவினை ஆசைகளால் வருவது அவை யாவும் சஞ்சிதவினையோடு சேர்ந்து அடுத்த பிறவியில் பிராரத்துவவினையாக அனுபவிக்கக் கொடுக்கப்படும். எனவே மனிதன் தன்னைத்தானே படைத்துக்கொள்ளுகிறான் என்றுங் கூறலாம். வினைகளுக்குக் காரணம் ஆணவம் அவற்றிற்குக் களைப்புச் சக்தியுண்டு. அது காலப்போக்கில் சாந்தமாகும். இத் தத்துவத்தை யறிந்தால்யாரும் தீமை செய்யார். இத் தத்துவத்தை சிறுவருக்குப் போதித்தால் தீமைகளில் ஈடு படார். தாயுமானசுவாமிகள் செய்யும் வினை அனந்தமென்றார்.

இந்தக் கருத்தை 2000 வருடங்களுக்கு முன்னர் புற நானூறு 192 வது செய்யுள் மூலம் கணியன் பூக்குன்றனர் கூறியுள்ளார்.

யாதும் ஊரே யாவருங் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவின்
இன்னா தென்றலு மிலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற்பேர் யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்
முறைவழிப் படூஉம் மென்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலு மிலமே.
சிறியோரை யிகழ்த லதனினு மிலமே.

இது சைவ சித்தாந்தக் கருத்துடைய செய்யுள்.

இச்செய்யுளின் சாதலும் புதுவதன்றே என்றாராதலால் பூமியில் பிறந்தன யாவும் இறக்குமென்பது அதன் கருத்து.

தெரிவாக ஊர்வன நடப்பன பறப்பன
செயற்கொண்டிருப்பன முதல்
தேகங்கள் அத்தனையும் மோகங்கொள் பௌதிகம்
சென்மித்த ஆங் கிறக்கும்.

என்னும் தாயுமான சுவாமி பாடலுங் காண்க.

படைத்தல் காத்தல் அழித்தல் என்று கூறுவன யாவும் பொருளின் பொதுக்குணம். அது கடவுள் செய்கையல்ல.

கருவிற் பட்டபொழுதே பிறப்பும் இறப்பும் கலக்கும் என்பது மணிமேகலை கருத்து. பிறப்பு இறப்பு முதலியன வற்றை கடவுள் செய்கின்றாரென்றால் மட்டி மடையன் மிலேச்சன் இவர்களையும் கடவுள் படைத்துக் காத்து சங்கரித்து விடுகின்றார் என்று விகாரந் தோன்றும். கடவுள் நம்மைப் படைத்தார் என்று கூறினால் கடவுளே மோட்சத்தையும் தருவார் என சித்தவிகாரம் தோன்றும்.

## 12. சமய ஆராச்சி

எல்லாச் சமயமும் நன்மையையே போதிக்கின்றன. வெவ்வேறு பாதைகளாக இருக்கலாம்



யேசு கிறிஸ்துநாதர் ஒரு கன்னத்தில் அடித்தால் மற்றக் கன்னத்தையும் திருப்பிக்கொடு என்று கூறினார். காந்தியடிகளும் பல சைவப் பெரியார்களும் இக்கருத்தை வலியுறுத்தியுள்ளனர். முஸ்லீம் சமயமும் புத்தசமயமும் இக் கருத்தை ஏற்றுக்கொள்ளுகின்றன. எனவே சமயங்கள் யாவும் ஒரே கருத்துடையவை. ஒரு முஸ்லீம் ஞானிக்கும் சைவ ஞானிக்கும் ஒரு வித்தியாசமுங் கிடையாது வேறு சமயமுடையவர் என்பதே தோன்றியிருக்கும்.

## 13. மொழி ஆராய்ச்சி

தமிழ் மொழியை ஆராய்ந்தால் அவற்றின் தொகுப்பு சைவ சித்தாந்தத்திற் கூறியிருப்பதுபோல நாத, விந்துப் பாகுபாட்டில் தொகுக்கப்பட்டிருப்பது காணப்படுகின்றது. வேறு எந்த மொழியும் தமிழ் மொழிபோற் தொகுக்கப்படாமையால் கடவுளாற் கொடுக்கப்பட்ட மொழி அதென்பது நிச்சயப்படுகின்றது.

கன்னல் அமுதெனவும் முக்கனியெனவும் வாயூறு
கண்டெனவும் அடியெடுத்துக்
கடவுளர்கள் தந்த தமி......

என்று தாயுமான சுவாமிகள் கூறுவதால் தமிழ் கடவுளால் கொடுக்கப்பட்டது என்பதற்கையமில்லை. தமிழ்மொழியின் பிரதானமானது எழுத்து:

என் பெயர் முறை பிறப்புருவ மாத்திரை
முதலீறிடைநிலைபோலி யென்றா
பதம் புணர்பெனப் பன்னிருபாற்றதுவே.

ந. : நூ. சூ. 57

எனத் தமிழ் மொழி பன்னிரண்டு பகுதியாக உடையது இவற்றுள் எந்த ஒரு பகுதி மயங்கினாலும் யாவும் மயங்குமென்பது விதி சிலர் தமிழ் மொழியைக் கற்பிப்பதில் இலகுவான முறையைக் கடைப்பிடித்து சுருக்க முறை கையாளுவர். மாணவர் அவர்களின் இலகு முறையால் பெருங் கஷ்டத்திற்குள்ளாவர். அது விஞ்ஞானமுணரமுடியாத நிலையாம்.

## 14. பாயிர ஆராய்ச்சி

தற்புகழ்ச்சிக் குற்றம் கவனியாது சிலர் பாயிரத்தை

வகலைச், ஸ்ரீ மெய்கண்டதேவர் கூறிய சைவசித்தாந்தம் இடைக் காரணமாகும். தாம் பெற்ற செல்வம் பிறரும் பெறக் கருதிச் செய்தமையால் இடைக் காரணமாம்.

ஸ்ரீலஸ்ரீ மெய்கண்டதேவனார் கூறிய சைவ சித்தாந்தச் சூத்திரங்கள் பன்னிரண்டையும் இரௌரவாகமச் சூத்திரங்கள் பன்னிரண்டுமாக்கிப் போடவேணும் என்ற தப்பிதமான பொய்க் கருத்து திரு. சிவஞான முனிவருக்கும் திரு. அருணந்திசிவாச்சாரியாருக்கும் இருந்ததைக் கடைக் காரணமென்று கூறலாம்.

சிவபெருமானால் உமையம்மையாருக்குக் கூறப்பட்டசைவ சித்தாந்தத்தை பன்னிரண்டு சூத்திரங்களில் அடக்கிக் கூறிய ஸ்ரீ மெய்கண்டதேவர், இனம் தெரியாதவரால் கூறப்பட்ட இரௌரவாகமச் சூத்திரம் பன்னிரண்டையும் கூறினாரென்று கூறக் காரணமில்லை.

பண்டைய இலக்கண விதிகளில் தப்பிதம் காணமுடியாது அவைகளை அனுட்டியாவிட்டால் யாவும் மயங்கும்.

## 21. மெய்கண்டசூத்திரத்திற்றுங் களங்கூறப்பட்டது

அவன் அவள் அது எனுமவை மூவினைமையிற்
றோன்றிய திதியே யொடுங்கி மலத்துளதா
மந்தமாதி யென்மனார் புலவர். மெ. சு. 1ம் சூத்திரம்

(இ-ள்) அவன் அவள் அது என்னும், பதி பசு பாசம் அவை எனவே இருமை கருதி அவள் என்னும் பசுவும் அது என்னும் பாசமும் மூவினைமையிற்; சஞ்சிதம், பிராரத்துவம் ஆகாமியம் என்னும் மூன்று வினைகளைப் பொருந்தியவை. தோன்றியதிதியே ஒடுங்கி மலத்துளதாம்; தோன்றியவகையே ஒடுங்கி மும்மலத்துள் இருப்பன. அந்தம் ஆதி என்மனார் புலவர்; அவற்றை தொடக்கமும் முடிபும் என்று புலவர்கள் கூறுவர்.

குறிப்பு: பதி, பசு, பாசம் என்பதை அவன் அவள் அது என்றார் அவன் கூறுபவனாயினும் அவன் என்ற சொல் அங்கு வைக்கப்படாவிட்டால் யாப்பு விரிக்கும்பொழுது பதி என்ற சொல் யாப்பு விரித்துக் கூறமுடியாததலால் அவன் என்ற பதியும் அங்கு வைத்துக் கூறப்பட்டது. மெய்கண்ட



தேவரது சூத்திரம் கீர்த்தித் திருவகவல் வரிகள் 9-10 தொடர்புடையது.

அருணந்திசிவாச்சாரியர் முதற் சூத்திர உரை என்று
சிவஞானசித்தியாரில்

ஒருவனோடொருத்தியொன்றென் றுரைத்திடு முலகமெல்லாம்
வருமுறை வந்து நின்று போவது மாதலாலே
தருபவ னொருவன் வேண்டுந் தானுமுதலீறுமாகி
மருவிடு மநாதி முத்த சித்துரு மன்னி நின்றே.

பதி மாயையிலிருந்து தோன்றியவர் என்ற கருத்துத் தொனிக்க அதுமவைப் படர்க்கைப் பொருளாகக் கூறப்பட்டார்.

உரைச் செய்யுளுக்கும் ஸ்ரீ மெய்கண்டதேவரது முதலாஞ் சூத்திரத்திற்கும் தொடர்பு காணப்படவில்லை.

## 22 மெய்கண்ட முதலாஞ் சூத்திரம் என்று சிவஞானபோதங் கூறும் உரை

வார்த்திகப் பொழிப்பு: (என்று கூறி)

கருத்துரை:- "என்னை முதலிற் றெனின்" சங்காரகாரணனாயுள்ள முதல்வனையே முதலாக உடையது இவ்வுலகம் என்பது உணர்த்துதல் நுதலிற்று. என்று கூறுகின்றார்.

உரைவகை:- இதன் பொழிப்பு உரைத்துக் கொள்க. (இவ்விதமாக உரை கூறுவது தமிழ்மரபிற்கப்பாற்பட்டது.)

(1) சூத்திர உட்பொருள் என்ற தொ. சூ. 649 பிரகாரம் முதலில் சூத்திரத்திற்கு உரை காணப்படவில்லை இது தமிழ் இலக்கண மரபிற்கு மாறானது.

படைத்தல் காத்தல் அழித்தல் கடவுள் செய்கையல்ல இவை பௌதிகப் பொதுக் குணம் சைவ சித்தாந்தக் கருத்துப்படி கடவுள் கிரியையாகாது. சிவஞானசித்தியார் ஆசிரியர் ஆகிய நூல் மூலம் சைவசமயத்தையும் கடவுளையும் பழிக்கச் செய்வதாகத் தோன்றுகின்றது. சிவஞானபோதம் சிவபெருமானை கொலைத் தொழில் செய்யுங் கடவுளாக்குகின்றது மல்லாது இருவரும் தொல்காப்பிய விதிகளையும் பழிக்கப் பண்ணுவதாகக் காணப்படுகின்றது. நூல்கள் கூறத் தெரியாவிட்டால் கூறாது இருக்கலாம் தொல்காப்பியம் ஒத்த சூத்திரம் என்னும் 644ல் கூறும் விதிகளுக்கு அமையாது கூறிய சிவஞான

சித்தியார் பரபக்கம் முற்றுகச் சமயகண்டனஞ் செய்கின்றது. அது சைவக் கருத்தல்ல சிவஞானசித்தியாரும் சிவஞான போதமும் விதிக்கு மாறான நூல்கள் இவைகள் மெய்கண்ட தேவரையும் மெய்கண்ட நூலையும் சைவசமயத்தையுங் கேலியாக்குவதினுல் நூல்கள் என்று கூறமுடியாது, அவர்களே ஏமாந்தனர் என்றுங் கூறலாம். ஸ்ரீ மெய்கண்டநாயனுருரை என்று இரௌரவ ஆகமச்சூத்திரத்திற்கே உரை கூறியிருக்கின்றனர் சைவர்களும் நூல் மாறுபாடுகளை ஒருபக்கம் வைத்துவிட்டு கோயில்களுக்கு செல்லாது மானத பூசையில் சிவன், சத்தி, விக்கினேசுவரர் முருகக்கடவுள் நால்வரையும் வணங்கவும் தவறவில்லை. அதுவே சைவம் தழைத்து நிற்பதற்கும் முக்கிய காரணமாம்.

சைவ சித்தாந்தத்தில் கூறும் படைத்தல் என்பது அணுவில் நாதத்தை சித்தமாகப் படைப்பது. அழித்தல் என்றால் கோசத்தைக் களைவது, அது முத்தி கொடுப்பதற்காகக் களையப்படுவது திருவெழு கூற்றிருக்கையில் கூறும் படைத்தளித்தழிப்ப என்பதன் கருத்து படைத்து, காத்து மறைத்து என்று பொருள் தரும். அழித்தல் — கரத்தல் மறைத்தல் கிரியைக் கதிபதி முருகக்கடவுள்.

## 23. சைதன்னிய விளக்கம்

ஆன்மா வாழ்க்கை மூலம் இறைவனோடு சைதன்னியமடையும். அக்காலத்தில் ஆன்மாவின் பழைய வாழ்க்கை நாமம் முதலியன சூனியமாக ஆன்மா புதுப் பெயர் பெற்று அதே உடம்பின் கோசத்தின் வேறாக சைதன்னிய நிலையில் வாழ்ந்து முத்தியெய்தும். அதே சைவமென்பதன் கருத்து

**24. சைவம்** எம்மால் எழுதப்பட்ட சைவ சித்தாந்தத்திலும் சைவவேதாந்தத்திலும் சைவம் என்ற சொல்லின் பிறப்பைப் பற்றி கூறியுள்ளோம். இந்த நூலும் தனி நூலானதினுல் சைவம்என்ற பதத்தின் விளக்கம் தரப்படுகின்றது.

உதாரணம்:

1. மருணீக்கியார்: திருநாவுக்கரசுசுவாமிகள் எனப்பட்டார்
2. வாதவூரர்: மாணிக்கவாசகசுவாமிகள் எனப்பட்டார்
3. பெயர் தெரியாது: யாழ்ப்பாணம் யோகசுவாமிகள் எனப் பெயர் பெற்றார்



ஒரே உடலில் முன்னது சூனியமாக பின்னது வாழும் இறந்தாலும் இவர்கள் சுத்த மாயா புவன வாழ்க்கை எய்தி பர முத்தியெய்துவர்.

## 24. பருப் பொருள்

பண்டைக் காலத்தில் பாயிரங் கூறும் ஆசிரியர் பருப் பொருள் கூறியே பாயிரங் கூறுவர்.

பருப் பொருள் கேட்டார்க்கு நூலின் நுண் பொருள் இனிது விளங்கும் என்று நக்கீரதேவருங் கூறியிருக்கின்றார்.

தொல்காப்பியத்திற்குப் பாயிரங் கூறிய பனம்பாரனர் தொல்காப்பியத்திற்குப் பாயிரங் கூறும்பொழுது,

மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப்பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமையோனே.

என்று கூறியுள்ளார் தொ. கா. பா. வரி 13-15 காண்க

சைவம் என்ற பதமும் பதி, பசு, பாசத்தின்
பருப் பொருளாம்.

ஐந்—/—திரம் ஐந்து உறுதிப்பாடு

திரம்: என்ற சொல்லிற்கு மதுரைப் பேரகராதி உரம் உறுதி, மாற்ற முடியாதது என்று விளக்கங் கொடுப்பது காணலாம். ஐந்திரம் என்றால் மாற்ற முடியாத ஐந்து உறுதிப்பாடு என்று கூறலாம். இவற்றின் கருத்தைத் திருநாவுக்கரசு சுவாமிகள் ஒரு திருத்தாண்டகத்தில் கூறியிருக்கின்றார்.

உரித்தானை மதவேழந் தன்னை மின்னு
ரொளிமுடியெம் பெருமானை யுமையோர் பாகம்
தரித்தானைத் தரியலர் தம்புரமெய்தானைத்
தன்னடைந்தார் தம்வினைநோய் பாவமெல்லாம்
அரித்தானை யாலதன்கீழிருந்து நால்வர்க்
கறம்பொருள் வீடின்பமாறங் கம்வேதம்
தெரித்தானைத் திருநாகேச் சரத்துளானைச்
சேராதார் நன்னெறிக் கட்சேராதாரே.

குறிப்பு: மேற் கூறிய திருத்தாண்டகத்திலும் வேதம் என்ற சொல் யாப்பு விரித்து இவைதான் வேதம் என்று கூறமுடியாது என்ற காரணத்தினுல் "ஆறங்கம் வேதம்"

மெய்கண்ட சூத்திரத்திற்குக்
என்றார் விளக்கம் முன்னர்
கொடுக்கப்பட்டதுபோலக் கருத்துக் கொள்க.

## 25. ஐந்திர விளக்கம்

இன்பம் வீடு ஆறங்
ஐந்திரமென்பது அறம், பொருள்,
கம் என்க.

எழுத்து, சொல்லு, யாப்பு, காலம்,
ஆறங்கம் என்பது:
கற்பம், சந்தம் என்பன. இந்த ஆறும் வேதங்களை கற்கவும்
ஓதவும் உரியன.

வேதம் நான்கு எனவே அவைகளைக் கற்கும் ஆறங்க
மும் அவற்றில் ஒன்றும்.

## 26. நான்கு வேதம்

அறம், பொருள், இன்பம், வீடு நான்கும் வேதம் என்பதும்
அவற்றை பிரமபுத்திரர் நால்வர்க்கும் கல்லால நிழலின் கீழ்
சுத்தவித்தையில் இறைவன் மகேந்திர கிரியிலிருந்து
கூறினார்:-

கல்விதழ்
ச்சிந்த கங்கை தோய்ந்த திங்கட் டொல்லரா
சுழிந்த சென்னிச் சைவவேடந் தானினைத் தைம்புலனும்
அழிந்த சிந்தை யந்தணார்க் கறம் பொருளின்பம் வீடு
மொழிந்த வாயான் முக்கணாதி மேயது முதுகுன்றே

என்று திருஞானசம்பந்தசுவாமிகளது முதுகுன்றுத்
தேவாரங் கூறுகின்றது.

அறம் என்ற பதத்தைச் சிலர் தர்மம் என்று கூறுவர்
தர்மங் கொடுத்தால் கொடுத்தவரிடம் திரும்பி அனுபவிக்க
கொடுக்கப்படும் எனவே அறம் தருமம் அல்ல. அறம் எல்லாப்
பொருளினும் சிவணியிருக்கும் மறத்தினும் அறம் இருக்கும்
மறத்தினும் அறம் இருப்பதனால் தீமை கூடுதலாகவும் குறைத
லாகவும் இருப்பதற்கு ஏதுவாகின்றது.

## 27. அறம்

என்பது தலைவி (ஆன்மா) தலைவன் பாதம் பற்றி அறத்
தோடு கற்புநெறி பூண்டு இருத்தல் இந்த நிலையில் நின்று
வாழ்ந்தவர் திருநாவுக்கரசுவாமிகள் அவர் அறப் பகுதி
வேதத்தை உலகுக்கு ஈந்தார். (பக்கம் 15 பார்க்க)



## 28. பொருள்

என்பது தலைவி பரம்பொருளின் பாதம் பற்றி கற்பு
நெறி பூண்டிருப்பது. பொருள் நிலையில் வாழ்ந்து பொருள்
வேதத்தை தந்தவர் மாணிக்கவாசகசுவாமிகள் பொருள் இலக்க
ணத்திற் சிறந்த திருக்கோவையாரையும் ஈந்தார்.

ஆரணங்காணென்பர் அந்தணர் யோகியர் ஆகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர் காம நன்னூலதென்பர்
ஏரணங் காணென்பர் எண்ணர் எழுத்தென்பர் இன்பு-
லவோர்
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே

## 29. இன்பம்

தலைவி தலைவன் பாதம்பற்றி பேரின்ப நிலையில் கற்புக்
கொண்டிருத்தல் இன்ப வேதத்தை உலகிற் கீந்தவர் சுந்தர
மூர்த்தி சுவாமிகள்.

மணப்பந்தலில் தடுத்தாட்கொள்ளப்பட்ட திரு. சுந்தர
மூர்த்தி சுவாமிகள் பின் இருவரை புணர்ந்தும் கற்புக்குலையா
திருந்தார்.

## 30. வீடு

வீடு என்பது விடுதல் யாதை விடுதல் எனின் அறம்
பொருள் இன்பத்தை விட்டு அல்லது துறந்து பேரின்ப
மடையக் கற்புநெறி பூண்டிருத்தல்.

## 31. ஆறங்கம்

என்பது அறம் பொருள் இன்பம் வீடு நான்கையும் கற்க
வும் வேள்வி முதலிய இயற்றவும் கற்றுக் கொண்டிருத்தல்

கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழா அர் எனின்.

என்னும்குறளுள் காண்க

---

குறிப்பு: அறத்தின் அநிவியாத்தி நீக்கத்திற்காக
மனத்துக்கண் மாசு இலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீரபிற

என்னும் திருக்குறள் காண்க

பதிகம் திருநீலகண்டம் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

பண்: *வியாழக்குறிஞ்சி*

அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லுமஃ தறிவீர்
உய்வினை நாடா திருப்பது முந்தமக் கூனமன்றே
கைவினை செய் தெம்பிரான் கழல்போற்றுது நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறுதிருநீலகண்டம். 1

காவினையிட்டுங் குளம்பல தொட்டுங் கனிமனத்தால்
ஏவினையாலெயில் மூன்றெரித் தீரென் றிருபொழுதும்
பூவினைக் கொய்து மலரடி போற்றுதும் நாமடியோம்
தீவினை வந்தெமைத் தீண்டப்பெறுதிரு நீலகண்டம். 2

முலைத்தடம் மூழ்கிய போகங்களுமற் றெவையுமெல்லாம்
விலைத்தலை யாவணங் கொண்டெமையாண்ட விரிசடையீர்
இலைத்தலைச் சூலமுந் தண்டுமழுவும் இவையுடையீர்
சிலைத்தெமைத் தீவினை தீண்டப் பெறுதிரு நீலகண்டம். 3

விண்ணுலகாள்கின்ற விச்சாதரர்களும் வேதியரும்
புண்ணியர் என்றிருபோதுந் தொழப்படும் புண்ணியரே
கண்ணிமை யாதன மூன்றுடையீருங் கழலடைந்தோம்
திண்ணிய தீவினை தீண்டப்பெறுதிரு நீலகண்டம். 4

மற்றிணை யில்லா மலைதிரண் டன்னதிண் டோளுடையீர்
கிற்றெமை யாட்கொண்டு கேளாதொழிவதுந் தன்மை
கொல்லோ
சொற்றுணைவாழ்க்கை துறந்துந் திருவடி *யேயடைந்தோம்
செற்றெமைத் தீவினை தீண்டப் பெறுதிரு நீலகண்டம் 5

மறக்கு மனத்தினை மாற்றியெம் ஆவியை வற்புறுத்திப்
பிறப்பில் பெருமான் திருந்தடிக் கீழ்ப்பிழையாத வண்ணம்
பறித்த மலர்கொடு வந்துமை ஏத்தும் பணி அடியோம்
சிறப்பிலித் தீவினை தீண்டப்பெறுதிரு நீலகண்டம். 6

* * * 7



கருவைக் கழித்திட்டு வாழ்க்கை கடிந்துங் கழலடிக்கே
உருகி மலர்கொடு வந்துமை ஏத்துது நாமடியோம்
செருவில் அரக்கனைச் சீரில் அடர்த்தருள் செய்தவரே
திருவிலித் தீவினை தீண்டப்பெறுதிரு நீலகண்டம். 8

நாற்றமலர்மிசை நான்முகன் நாரணன் வாது செய்து
தோற்றம் உடைய வடியுமுடியுந் தொடர்வரியீர்
தோற்றினுந் தோற்றுந் தொழுதுவணங்குவதும் நாமடியோம்
சீற்றம தாம்வினை தீண்டப்பெறுதிரு நீலகண்டம். 6

சாக்கியப் பட்டுஞ் சமணுருவாகி யுடை ஒழிந்தும்
பாக்கியம் இன்றி இருதலைப் போகமும் பற்றும் விட்டார்
பூக்கமழ் கொன்றைப் புரிசடையீரடி போற்றுகின்றோம்
தீக்குழித் தீவினை தீண்டப்பெறுதிரு நீலகண்டம். 10

பிறந்த பிறவியிற் பேணியெஞ் செல்வன் கழலடைவான்
இறந்த பிறவியுண்டாகில் இமையவர் கோனடிக் கண்
திறம்பயில் ஞானசம்பந்தன் செந்தமிழ் பத்தும் வல்லார்
நிறைந்த உலகினில் வானவர் கோனொடுங் கூடுவரே. 11

* துறந்துன் றிருவடி என்றும் பாடம்

வேதங்கள் யாவும் திருமுறையில் முறையீடாகக் கூறப்பட்டிருக்கின்றன.

துன்பத்தைப் போக்குவதற்கு ஒரே ஒரு வழி இறைவன் பாதம் பற்றிநிற்றலேயாம். சிவனடியாரை அன்பர்கள் பற்றி இறைவனை வழிபாட்டால் எந்த வினையையும் அறுக்கலாம் இக் கருத்தைக் கொண்டே பெரியோர் விதியை மதியால் வெல்லலாம் என்று கூறுவர். அன்பும் அறனும் அருளும் நிறைந்த திருநீலகண்டப் பாசுரத்தை நாள்தோறும் பத்தியாய் ஓதிவரின் மனக்கவலையும் பிணியும் பிறவும் அணுகாது என்பதும் வானவர் நாடுவழி திறக்கும் என்பதும் நிச்சயம்.

சில பிழைகள் தற்செயலாக ஏற்பட்டன
அவற்றைத் தயவுசெய்து திருத்தி வாசிக்கவும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 6 | தேற்றுவித்த | தோற்றுவித்த |
| 1 | 27 | முகக்தான் | முகத்தான் |
| 2 | 19 | ஆறுமுகநாவலபெருமான் | ஆறுமுகநாவலர் பெருமா[ன்] |
| 4 | 13 | நூல்களுகு | நூல்களுக்கு |
| 7 | 23 | பொலி | போலி |
| மு.உ. 6 | 1 | சமுங்கல் | காமுங்கல் |
| 8 | 27 | | அத்தியாயம் 2ப் பார்க்கவு[ம்] |
| 11 | 31 | இரௌவக | இரௌரவ |

இஃது ஆராய்ச்சி நூல் ஆனதினால் கூறுவன கூறல் என்னுங்
குற்றம் நீக்கி வாசிக்கவும்.

